இருபத்திரண்டு ஆண்டுகளுக்குப் பிறகு, இப்போது அப்துல் தையாப்ஜி சேட்டு இறந்து போய், மகன் சுலேமான் சேட்டு, சிறுவயதிலேயே மிகுந்த சாமர்த்தியமாய்த் தகப்பனார் வைத்துப் போன பெரிய இறக்குமதி வியாபாரத்தை நடத்தி வருகிறார்.

சாமிநாதையர் மகன் பெயர் அசுவத்த நாராயணன். எஸ். எஸ். எல். ஸிக்குமேல் என்ன கஷ்டப்பட்டாலும் அவன் படிப்பு ஏறமுடியவில்லை. பம்பாயிக்குப்போய், இரண்டு மாதம் அங்கே நண்பர்களுடன் இருந்துகொண்டு சிபார்சுகள் சம்பாதித்து, எங்கெங்கேயோ தேடிப்பார்த்தும் வேலை ஒன்றும் கிடைக்காமல் திரும்பி வந்தான். அவனைப்பற்றிச் சாமிநாதையருக்கு எப்போதும் கவலை. தெலுங்குச் சோதிடன் எழுதிக்கொடுத்திருந்த குறிப்பில், "மகன் பெரிய வியாபாரி யாவான்; பாக்கிய சாலி; ஆனால் தாய் தகப்பனுக்கு ஒரு பிரயோசனமும் இல்லை" என்று எழுதியிருந்தது."

"எனக்கும் உனக்கும் ஒரு பிரயோசனமும் இல்லாவிடினும், அவன் நன்றாயிருந்தால் போதுமே; சோதிடம் எல்லாம் பொய்" என்றார் சாமிநாதையர்.

"பொய் என்று சொல்ல முடியுமா? எழுதியிருந்தபடி குழந்தை பிறக்கவில்லையா? பகவான் எழுத்துப் பொய்யாகுமா? இன்னும் என்ன வரும், என்ன வராது என்று யாருக்குத் தெரியும்? ஒரு

செட்டியாரிடம் சேர்த்துப் பாருங்கள். வியாபாரத்தில் கெட்டிக்காரனைகத் தேர்ச்சிபெற்றாலும் பெறுவான் '' என்றாள் அகிலாண்டம்மாள்.

சோதிடம் பொய்யாகுமா ?

எவ்வாறாயினும், அவசியமாக ஆஸ்பத்திரிக்குப் போகாமல் பிரசவங்கள் வீட்டிலேயே நடப்பது க்ஷேமம்.

# வேணுகானம்

ஒரு கலைக்கதை

---

'திரிவேணி' பத்திரிகையின் பழைய இதழ்களை ஒருநாள் புரட்டிப் பார்த்துக் கொண்டிருக்கையில் கண்ணுக்குப்பட்ட ஒரு கதையை நடுவிலிருந்து படிக்கலானேன். மனத்தைக் கவர்ந்த அக்கதையை, ஆரம்பித்த இடத்திலிருந்து என்னையும் அறியாமல் முடிவுவரையில் படித்து மிகவும் அனுபவித்து, இதை யார் எழுதியது, இவ்வளவு அழகான பாவசித்திரம், தேசாபிமானம், தெய்வபக்தி, கலைஞானம், தேடியெடுக்க ஒரு பிழை யில்லாத, ஸ்படிகத் தெளிவு பொருந்திய, ஆங்கில பாஷா நடை — இவ்வளவும் யார் இழைத்தாக்கியது என்று கதையின் முகப்பைத் திருப்பிப் பார்த்தேன். கன்னட இலக்கியத்திற்குப் புத்துயிர் தந்து வருபவர்களின் முன்னணியில் நிற்கும் ஆசிரியரும், என் நண்பருமான மாஸ்தி வேங்கடேசையங்கார் எழுதியதென்றிருந்ததைக் கண்டு பெருமகிழ்ச்சியுற்றேன். ஆசிரியர் பெயரின்கீழ், கன்னடத்திலிருந்து ஆங்கில மொழிபெயர்ப்புச் செய்தவர் என் பள்ளிக்கூடச் சகாவாயிருந்து, பிறகு வாழ்வில் நாங்கள் வெவ்வேறு பாதைகளில் பிரிந்துபோயிருந்தாலும், இளமைப் பருவத்திற் போலவே இப்பொழுதும் எங்கள் நட்பு வாடாது இருந்து வரும் நவரத்னம் ராமராவ் அவர்கள் என்று கண்டதும், என் மகிழ்ச்சி அளவு கடந்து பொங்கிற்று. அழகும், விஷயமும் பொருந்திய இக்கதையைத் தமிழரும் அனுபவிக்க வேண்டுமென்று ஆசைப்பட்டுத் தமிழில் பெயர்த்தேன். கதையின் பெயர் 'மாஸ்பதி' என்பதை 'வேணுகானம்' என்று மாற்றினேன். கலையே ஒருநாட்டின் உயிர். இவ்வுண்மையை விஷயமாக அமைத்து, இன்னும் வேறு பல நல்ல தத்துவங்

களையும் பொருத்தி, மிக்க கற்பனா சக்தியுடன் இக்கதை ஆக்கப்பட்டிருக்கிறது. ஆசிரியர் எழுதியதைக் குறைக்க மனம் வராதபடியால் கதை கொஞ்சம் நீண்டுவிட்டது. ஆயினும் படிப்போருக்குச் சோர்வு தோன்றாது என்று எண்ணுகிறேன்.

[என் பாட்டனார் ஒரு 'துப்பட்டி கலெக்டர்'. அந்த நாட்களில் கறுப்பு மனிதர்களுக்கு அதற்குமேல் உத்தியோகம் கிடையாது. என் பாட்டனாரிடம் ஆங்கிலேய மேல் அதிகாரிகளுக்கு மிகுந்த நம்பிக்கையும் சிநேகமும் இருந்தன. எங்கள் வீட்டில் அவர் காலத்துக் கடுதாசிக் கட்டுகளும் தஸ்தாவேஜுகளும் ஏராளமாய் இருந்தன. அவைகளைப் பிரித்தெடுத்து உபயோகமில்லாத குப்பையைப் பொசுக்கிப் போடப் பார்த்த பொழுது வெள்ளைக்காரக் 'கலெக்டர்' ஒருவருடைய தினசரிக் குறிப்புப் பாதி கிழிபட்டுப் போனது காணப்பட்டது. அதைப் படித்துப் பார்த்ததில் சில பாகங்கள் வெகு ரஸமாக இருந்தன. அவற்றை நீங்களும் ரஸிப்பீர்களென்று மொழிபெயர்த்துச் சொல்லுகிறேன் : கேளுங்கள்.]

இராவணனைக் கொன்றபின் தன் வீரபட்டாளத்துடன் நகரத்துக்குள் பிரவேசித்து விபீஷணனைச் சிம்மாதனத்தில் அமர்த்திப் பட்டாபிஷேகம் செய்விக்கலாம் என்று எண்ணி ஸ்ரீராமர் போனாராம். போகும்போது நகரத்து வாசலில் நிலைக் கதவத்தில் பதிய வைத்திருந்த ஓர் அற்புதமான மரகதக் கல்லைப் பார்த்தாராம். அதைப் பார்த்ததும் அவர் தம் உள்ளத்தில் உண்டான ஆசையின் வேகத்தைக்கண்டு அவர் பயந்துவிட்டாராம். அடடா! நகரவாசலிலேயே இப்படி என் மனம் தடு

மாறினால், இன்னும் உள்ளே பிரவேசித்துவிட்டால் என்ன விபரீதம் நேரிடுமோ' என்று பயந்து, தாம் வெளியிலேயே இருந்துகொண்டு இலக்குமணனை உள்ளே அனுப்பி விபீஷணனுக்குப் பட்டாபிஷேகம் செய்து முடித்துவிடச் சொல்லிவிட்டார் என்றொரு கதை சொல்லக் கேட்டிருக்கிறேன்.

நமக்குக் கிட்டின இந்தத் தேசம் ஓர் இலங்கையைப் போன்றது. ஆனால் நாமோ ஸ்ரீராமசந்திரனைப் போலில்லை. "எல்லாம் விட்டுவிட்டு என்னோடு வா" என்று சொன்னது ஏசுநாதரல்ல! பணப்பிசாசுதான் அம்மாதிரி நம்மைக் கூவியழைத்ததாகவும், நாமும் அதைத் தொடர்ந்து பின்செல்வதாகவும் இருக்கிறது. நாம் இந்தத் தேசத்தில் கால் வைத்தது முதல், எல்லாப் பொருள்களையும் கவர்ந்து கொண்டு போவதே தொழிலாக இருக்கிறோம். இங்கே அழகுள்ள எதைக் கண்டாலும் அதை நம் ஊருக்குத் தூக்கிப் போகவேண்டும் என்று தீர்மானித்து விடுகிறோம்.

இப்படியெல்லாம் சிந்திக்க ஒரு சம்பவம் நடந்தது. என் தங்கை எமிலியும் அவள் புருஷனும் கொஞ்சநாள் என்னுடன் சுகவாசம் செய்யவந்திருந்தார்கள். எமிலி புருஷர் ஜான் பார்க்குஹாருக்கு இந்த நாட்டின்மேல் அளவிலாப் பிரியம். நம் ஆங்கிலப் சமூகத்திற்குள் இந்தியா என்றால் வேறு யாருக்கும் அவ்வளவு மோகம் இல்லை. இந்த நாட்டில் வசிக்கும் மக்களின் சுபாவமும், பேச்சும், பழக்க வழக்

களும் அவருக்கு வெகு நன்ருய்த் தெரியும். இந்தத் தேசத்தின் புராதன நாகரிகத்திலுள்ள சிரேஷ்டமான விஷயங்களெல்லாம் அவர் நன்கு அறிவார். கோயில்களிலுள்ள அழகிய சிற்பங்களின் பொருள் எல்லாம் அவருக்கு விளங்கும். அதில் அவர் மிகவும் ஈடுபட்டு அனுபவிப்பார். இந்தியாவின் கலைகளும் அதன் நாகரிக மேம்பாடும் நம்மவருக்கு விளங்கியதும், இந்தத் தேசத்தில் ஒரு சிறந்த நாகரிகம் பல்லாயிர வருஷங்களாகக் காப்பாற்றப்பட்டு வந்து அதுவே இன்னும் மக்களின் தினசரி வாழ்வில் ஊடுருவி நின்று அவர்கள் எண்ணும் எண்ணங்களையும், செய்யும் செயல்களையும் நேர் வழியில் நிற்கச் செய்து வருகிறது என்பதை மேல் நாட்டார் அறிந்ததும் ஜான் பார்க்குஹார் செய்த சேவையாலேதான். இந்நாட்டில் பார்க்க வேண்டிய கோயிலோ, கோட்டையோ, அரண்மனையோ, மடமோ, எங்கிருந்தாலும் போய்ப் பார்த்திருக்கிருர். பழைய சித்திரங்கள், சிலைகள் முதலிய பூர்விகக் கலைப்பொருள்கள் எங்கிருந்தாலும் தேடிக் கண்டுபிடித்துப் பார்த்து அனுபவிப்பார். அவர் அனுவித்ததைப்போலவே அவர் அவைகளைப்பற்றி எழுதிய வியாசங்களைப் படிப்பவர்களும் அனுபவிப்பார்கள். இந்திய மக்களும் அவரைப் புகழ்ந்து நன்றி செலுத்துவார்கள். இந்தச்சேவையிலெல்லாம் எமிலியும் தன் புருஷனுடன் கலந்துழைப்பவள். அவளும் இந்த நாட்டின்மேல் மிகவும் அன்பு கொண்டவள்.

எங்கெங்கேயோ தேடிக் கண்டுபிடித்துப் பல சிற்பங்களையும் சித்திரப் படங்களையும் விலை கொடுத்தோ, இரந்தோ சேகரித்து வைத்திருக்கிறார். இன்னும் சில உருப்படிகள் சம்பாதித்துப் பூர்த்தி செய்து ஒரு சித்திர கலாமண்டபமே அமைக்க வேண்டுமென்பது அவர் ஆசை. இங்கே வரும் வழியில் அவர்கள் அஜண்டா குகைகளுக்குப் போயிருந்தார்கள். வந்ததிலிருந்து பார்க்குஹாருக்குப் பேச வேறு விஷயமே வருவதில்லை. எப்போதும் அஜண்டா ஓவியங்களைப் பற்றித்தான் பேச்சு. ஆனால் எமிலி மட்டும் மௌனமாகவே இருந்தாள். நான் கேட்டதற்கு, "நானும் பார்த்து மிகவும் அனுபவித்தேன். ஆனால் ஒரு வருத்தம் உண்டு" என்றாள். "ஏன்? என்ன விஷயம்?" என்று கேட்டேன்.

விஷயமாக ஒன்றுமில்லை. என் மனதில் உண்டான ஓர் எண்ணம், அவ்வளவே; இவ்வளவு அழகாக, சித்திரம் எழுதினார்களே; அவர்கள் காகிதத்திலாவது, கித்தானிலாவது எழுதியிருக்கக் கூடாதா! எவ்வளவு விலையானாலும் கொடுத்து வாங்கி ஊருக்கு எடுத்துப் போயிருக்கலாமே. நம்முடையதாக வைத்திருக்கலாமே! ஏன் இப்படிக் கல்லின்மேல் சித்திரித்து நம்மை மோகிக்க வைத்து ஆசையைத் தீர்த்துக்கொள்ள வழியே யில்லாமல் செய்தார்களோ தெரியவில்லை."

அவள் சொன்னது சரியென்றே தோன்றிற்று. இந்தியக் கலையில் ஊக்கம் கொண்டவர்

களுக்கு இவ்வித வருத்தம் உண்டாவது சகஜந் தானே. அழகான ஒரு பொருளைக் கண்டால் யாருக்கும் அதை அடையவேண்டும் என்று ஆசை உண்டாவது சுபாவந்தானே.

இப்படியே பேசிக்கொண்டுபோய் என் ஜில் லாவிலுள்ள பழைய கோயில், கோட்டைகளைப் பற்றிய பேச்சுக்கு வந்தோம்.

"உன் இலாகாவில் மாஸுமதி என்றதோர் ஊர் இருக்கிறதாமே? அங்கே ஒருவரிடம் சில பழைய ஓவியங்கள் இருக்கின்றனவாமே? நான் அவற் றைப்பற்றி நிறையக் கேள்விப்பட்டிருக்கிறேன்" என்று, படங்கள் வைத்திருப்பவர் பெயரும் விவர மும் சொல்லி, "முடிந்தால் அவரிடமிருந்து ஒன் றிரண்டு வாங்கிப்போக விரும்புகிறேன். இதற்கு ஒத்தாசை செய்ய முடியுமா?" என்று கேட்டார்.

ஆகட்டுமென்றேன். இந்தத் தேசத்தின் கலைச் சிறப்பை உலகத்தாருக்குத் தெரியப்படுத்த வேண் டும் என்று எனக்கு மிக்க ஆசை இருந்துவந்தது. அவ்வாறே நேற்று மாஸுமதிக்கு எல்லோரும் போனோம். மாஸுமதி இப்போது ஒரு சின்னஞ் சிறுகிராமம். மிகவும் ஜீரணித்துப்போய்க் கேவல மான நிலையில் இருக்கிறது. 'பேச்ரா' என்ற ஜாபி தாவில் சேரவில்லை. அவ்வளவுதான். (பேச்ரா என் றால் பே+சிராக், அதாவது உருதுவில் 'விளக்கு இல்லா ஊர்' என்று பொருள். தற்போது குடி யில்லாமல் நிலவரிக் கணக்குகளுக்கு மட்டில் ஒரு

தனிக் கிராமம்). ஊருக்கு வெளியே சில தனிக் கொட்டகைகள்; ஊருக்குள் நான்கைந்து வீடுகள் தான். எல்லா வீட்டாரும் ஏர்பிடித்து ஜீவனம் செய்பவர்கள்.

இதற்குச் சில நாட்களுக்கு முன்பு நான் அவ்வூருக்குப் போயிருந்தேன். ஒரு வயோதிகர் திண்ணையில் வெயில் காய்ந்துகொண்டிருந்தார். "ஏன் ஊர் இந்த நிலைக்கு வந்துவிட்டது?" என்று கேட்டேன். ஒரு விநோதம் உண்டு இந்தியாவில்: ஒரு படிப்புமறியாத சாதாரண மனிதர்களுங்கூட ஆழ்ந்த தத்துவங்களை நன்றாய்க் கண்டவர்களாயிருக்கிறார்கள். கிராமக் குடியானவர்கள் பேச்சிலேயுங்கூட வேதாந்த உண்மை கமழ்கிறது. குடியானவன் கூட ராஜகுமாரனைப்போல் கம்பீரமாக நடந்துகொள்ளுகிறான். ஊர் பாழாய்ப் போனதற்குக் காரணம் கேட்டதற்குக் கிழவர் சொன்னதாவது:—

"எல்லா நகரங்களுந்தான் நசித்துப்போக வேண்டும்" என்றார்.

"சில நகரங்கள் விருத்தியாகிக் கொண்டும் இருக்கின்றனவே!" என்றேன்.

"வளருங்காலத்தில் வளர்கின்றன; அதற்குப் பின் நசித்துப் போகின்றன" என்றார்.

"உங்கள் ஊருக்கு எக்காலத்திலாவது வளர் பருவம் இருந்ததா?" என்று கேட்டேன். கேள்வி அவ்வளவு புத்திசாலித்தனமான கேள்வியல்ல.

ஆனால் கிழவரை எப்படியாவது ஊரைப்பற்றிப் பேச்சுக்கு இழுக்கவேண்டுமென்று இவ்வாறு கேட்டேன்.

அவர் புன்சிரிப்புச் சிரித்து, "முதலில் யௌவனம் இன்றி விருத்தாப்பியம் எப்படி வரமுடியும்?" என்றார்.

அப்புறம் கிழவர் ஆரம்பித்துவிட்டார்: "இது தான் புராணங்களில் சொல்லப்பட்ட மாஹிஷ்மதி நகரம். புகழ் ஓங்கி வளர்ந்த கார்த்தவீரியார்ச்சுனனுடைய ராஜதானி. அவனுக்குப்பின் எத்தனையோ ராஜவமிசத்தார் இங்கே ஆண்டனர். ஒவ்வொரு வமிசமும் ஓங்கி வளர்ந்து பிறகு நசித்துப் போயிற்று. கடைசியாக முஸல்மான்கள் படையெடுத்து வந்தார்கள். அவர்களால் தாக்கப் பட்டுத் தோல்வியடைந்து, ராஜதானியா யிருந்த இந்த நகரம் பாழடைந்து இம்மாதிரி கிராமமாகி நின்றது. க்ஷீணித்துப்போய், நாலு வீடுகள்தான் நிற்கின்றன; பாருங்கள்" என்றார்.

புராணங்களில் கூறப்பட்டிருக்கும் மாஹிஷ்மதி, 'பேச்ரா' ஆகப்போகும் இந்தக் கிராமந்தான் என்பது விநோதமாக இருந்தது. ஆனால் கிழவனுருக்கு இதைப்பற்றிக் கொஞ்சமும் சந்தேகமில்லை! ஒரு கல்மண்டபத்தைக் காட்டி, "இங்கேதான் ஆயிரங் கையையுடைய கார்த்தவீரியார்ச்சுனன் தேகப் பயிற்சி செய்துவந்த இடம்" என்றார். ஒரு பழைய குளத்தைக் காட்டி, "இதுதான், அர்ச்சுனன் தின

மும் நீராடிய குளம்; அதோ கோயில்; அதுவே அவன் பூஜை செய்துவந்த தேவாலயம்'' என்றெல்லாம் காட்டினார். இன்னொரு மண்டபத்தைக் காட்டி, "இங்கேதான் ராவணனைப் பிடித்துக் கொண்டு வந்து மாஹிஷ்மதியிலுள்ள ஆண் பெண் அடங்கலும் வேடிக்கை பார்க்க நர்த்தனம் செய்வித்தது. இங்கேதான் ராவணன் பத்துத் தலைகளையும் இருபது கைகளையும் நீட்டி ஒளிவீசும் பூதாகாரமாகக் கூத்தாடினான். முதலில், பாவம்! வெட்கப்பட்டு 'மாட்டேன்' என்றான். கார்த்தவீரியன் கோபங்கொண்டு ராவணனை ஓர் அறை அறைந்தான். அறைபட்டதும் ராவணன் திடீரென்று எழுந்து நின்றான். எழுந்த வேகத்தில் அவன் தலைகள் கூரையில் இடித்துக் கல்லில் பத்துக் குழிகளாக்கியதை இப்போதும் பார்க்கலாம்'' என்று கிழவர் மண்டபத்தின் கூரையைக் காட்டினார்.

இந்தத் தேசத்தில் எந்தச் சிறிய ஊரிலுங்கூட இவ்வண்ணம் தங்கள் ஊரைப்பற்றி ஸ்தல புராணங்கள் சொல்லுவார்கள். தேவர்களும் புராண வீரர்களும் சம்பந்தப்பட்ட கதைகளும், சம்பவங்களும், தங்கள் ஊரிலேயே நடந்ததாகச் சொல்வார்கள். ரிஷிகளும், முனிவர்களும் இப்போதும் தங்கள் ஊரில் வாசம் செய்வதாகச் சொல்வார்கள்; இந்தக் கிழவர் பேச்சில் வியப்பொன்றுமில்லை.

ஆனால் இந்தக் கிராமம் முன்காலத்தில் ஒரு பெரிய நகரமாகத்தான் இருந்திருக்க வேண்டும்.

உதாரணமாக இந்த இரண்டு மண்டபங்களைப் பார்க்கலாம். அதிக உயரமில்லாது, தாழத்தான் கட்டியிருந்த போதிலும் கல் தூலங்கள் எவ்வளவு பெரியவை! கட்டடத்தின் உறுதியும் தொழில்நேர்த்தியும் கவனிக்கத்தக்கன. இதைக் கட்டிய ஆட்கள் தேகபலம் கொண்டவர்கள் என்பதைப்பற்றி ஐயமில்லை. அர்ச்சுனன் குளமோ முந்நூறு முழச் சதுரம்; கொத்திய கல்லால் விசாலமான படிகள் அமைக்கப்பட்டு வேலைத் திறமையுடன் கட்டப்பட்டிருக்கிறபடியால், பல ராஜவமிசங்களும் நாடுகளும் நசித்துப்போனலும், பல்லாயிர வருஷங்களாகக் குளம்மட்டும் கட்டினது கட்டினபடியே இருக்கிறது. செய்யும் தொழிலில் பூரண சிரத்தையும் மகிழ்ச்சியும் கொண்டு, அழகும் உறுதியும் அமைத்துப் பொருள்களை உண்டுபண்ணுவதே ஓர் ஆனந்தம் என்று கருதினவர்களால்தான் இத்தகைய ஒரு குளம் கட்டமுடியும். குளத்தில் இப்போது கொஞ்சந்தான் ஜலம் இருக்கிறது. அந்த ஜலம் எல்லாத் திசையிலும் ஒரே படிவரிசையில் தங்கி நிற்கிறது. படிகள் அவ்வளவு சுத்தமாக, நேர் தவருமல், கட்டப்பட்டுக் காலப் போக்கால் கொஞ்சமும் கெடாமல் இருக்கின்றன.

கோயிலைப் பாருங்கள்: கிரேக்க சிற்பத்தின் வடிவழகையும், நம்முடைய (ஆங்கிலேய) பெரிய உன்னதமான கட்டடங்களையும் கண்ட நம் கண்ணுக்கு, இந்தியாவில் காணும் கட்டடங்களும் சிற்ப

வேலைகளும் முதலில் ஒருவாறு ‘இவ்வளவுதானு’ என்று தோன்றலாம். ஆனுல் கோயில் முழுதும் நின்று பார்த்தால் அதன் அழகு ஒன்றும் குறைந்த தல்ல வென்பதை உணர்வோம். இது ஒரு சாதா ரணக்கோயில். நன்ருய், கல்லும் கம்பங்களும் வேலைத்திறமையுடன் சுத்தமாய் அமைத்துக் கட்டி யிருக்கிருர்கள். கோயிலில் ஒரு மூர்த்தியுண்டு. ஆனுல் பல வருஷங்களாகப் பூஜை இல்லை.

ஊரிலும் முன்காலத்தில் பெரிய மாளிகை களாக இருந்திருக்க வேண்டிய கட்டடங்களின் அஸ்திவாரக் கல்வரிசைகளை நெடுகக் காணலாம். வரிசைகளைக் கவனித்தால் நல்ல அந்தமாகத்தான் நகரம் அமைக்கப்பட் டிருந்திருக்கவேண்டும் என்று ஊகிக்கலாம்.

“இதுதான் அக்கிரகாரம்” என்று ஒரு வரி சைக் கற்களைக் கிழவனுர் காட்டினுர். “இது தட்டா ரத் தெரு, இது இன்னொரு ஜாதியார் தெரு” என்று வேறு வேறு வரிசைகளைக் காண்பித்தார். இப் போதுள்ள நிலைமையில், நகரத்தின் வீடுகளிலும் தெருக்களிலும் கற்பனுசக்தியாலுங்கூட ஜனங்களை நிரப்பி மனக்காட்சி காணமுடியவில்லை.

என் மைத்துனர் சொன்ன படங்களைப்பற்றி விசாரித்ததில் இந்த வயோதிகர் வீட்டில்தான் அவை இருக்கின்றனவென்று தெரிந்தது. அவருக் குச் சொல்லியனுப்பினேம். வெளியில் வந்து பழைய

மரியாதை முறைகளை அனுசரித்து நமஸ்காரம் செய்து உள்ளே அழைத்துச் சென்றார். நடை, பாவனைகளால் அவர் பெருமை வாய்ந்த சுபாவங் கொண்டவர் என்பது தெரிந்தது.

“நீங்கள் தானா கிருஷ்ணையர்?” என்றார் பார்க்கு றார்.

“ஆமாம், ஐயா.”

“உங்களிடம் கொஞ்சம் ஜோலியிருக்கிறது. அதற்காகத்தான் வந்தோம்.”

“உத்தரவு.”

“தங்களிடம் சில அழகிய புராதன படங்கள் இருக்கின்றனவாமே; அவைகளை நாங்கள் பார்க்க முடியுமா? அதற்காகத்தான் வந்தோம்.”

“ஓரிரண்டு படங்கள் இருக்கின்றன. இருப்ப வைகளைத் தாங்கள் பார்க்கலாம்; உட்காருங்கள்.”

இவ்வாறு சொல்லி எங்களை அஜா (ஆசா)ரத் தில் இருக்கச்செய்து உள்ளே போய்ச் சில படங்க ளுடன் வந்தார். முரட்டுக் கித்தான்மேல் ஏதோ மெழுகுப் பசை பூசி, அதன்மேல் வெகு சாதாரண சாயங்களைக் கொண்டு எழுதப்பட்டிருந்தன. ஆனல் சித்திரத்தில் எல்லாக் கோடுகளும் அழகும் நிச்சய மும் கொண்டவையாயிருந்தன. சில படங்களில் எழு தியதைச் சில விடங்களில்அழித்துத் திருத்தி எழுதிய தாகவிருந்தது. சில, முதலில் கண்ட கற்பனைம்

படியே எழுதியது எழுதியவாறு, திருத்தப்பாடில்லாமல் இருந்தன. ஓவிய மெழுதிய கை மிகத் திறமை கொண்ட கை, எண்ணியதை எண்ணியவாறு லேசாக வரையக்கூடிய கை என்பது விளங்கிற்று. ஒரு படம் கோபாலகிருஷ்ணனது படம். அதைப் பார்த்தவுடன் படமெழுதியவருக்குக் கோபால கிருஷ்ணன் ஊனுடலுடன் நின்று காட்சி தந்ததைக் கண்டே எழுதியதாகத் தோன்றிற்று.

ஆஹா! அந்த உருவத்தில் நிற்கும்நிலை, குழல் அன்புருவமாகிய உதடுகளைத்தொட அதை வாயில் வைத்துப் பிடித்திருக்கும் விரல்களின் அழகு, கண்களில் காணும் கரைகடந்த கருணைக்கடல், இவைகளை எப்படி வருணிக்க முடியும்? ஒரு கால் மேல் பாரம் தாங்கி, தேகம்சற்றுச் சாய்ந்தவாக்காய், மார்பின்மேலுள்ள பூமாலை மையத்தில் நில்லாமல் ஒருபக்கமாகத் தொங்க - இதெல்லாம் ஒருவாறு சொல்லிவிடலாம். ஆனல், குழலோசையைக் கேட்ட உலகம் பிரமித்துப் போய் அதன் ஆனந்தத்தில் மூழ்கி நிற்கும் காட்சியை எப்படித்தான் வருணிக்க முடியும்! உலகத்தில் ஒலி என்பதே, புலன்கள் எல்லாமே, பிரகிருதியே, அந்த அநந்த திவ்விய கானத்தில் ஒன்ருய்ப்போய், மரங்கள் ஆடாமல் நிச்சப்தமாய் நிற்பதும், கானத்தைக் கேட்ட கன்றுகளும் பசுக்களும் அப்படியே - புல் மேய்ந்திருந்தவை புல் மேய்ந்தவாறே, துள்ளிக்குதித்தன துள்ளினவாறே, நின்றது நின்றவாறே - மோகித்து நிற்பதும்,

தேவர்களும், ரிஷிகளும், கோபிகைகளும் அந்த வேணுகானம் என்னும் அமிருதத்தைக் குடித்து வெறிகொண்டவர்களைப் போல் ஆடுவதும், இவை களை யெல்லாம் எவ்வாறு சொல்லால் விவரிக்க முடியும்? இப்படத்தை எழுதினவன் தன் ஓவிய நாயகனை பகவானை நேரில் கண்டவனே யாவான்; கண்களால் அனுபவித்துத்தான் அவன் எழுதினான்; வேறில்லை.

எமிலியும், பார்க்குஹாரும் மகிழ்ச்சி ஆவேசத் தில் மூழ்கினர்.

"இது யார் எழுதிய படம்?"

"என் பாட்டனார் எழுதியது."

"அவர் தெய்விகப்புலமை பெற்றவர்."

"எங்கள் வமிசத்தில் அவர் ஒருவர்தான்."

"அவர் வேறு படங்கள் ஏதாவது எழுதினாரா?"

"ஓ! பல படங்கள் எழுதினார். ஆனால் அநேக மாக இதைப்போலவே கோபாலகிருஷ்ணன் படங் கள்தான். அதில் அவருக்குப் பைத்தியம். எத் தனையோ எழுதினார். எழுதி எழுதி இதுதான் நின்றது."

இப்படிச் சொல்லிவிட்டு உள்ளேபோய் ஒரு மூட்டை படம் கொண்டுவந்து அவிழ்த்தார். எல் லாம் கோபாலகிருஷ்ணன் படந்தான். சிலவற் றில் சிற்சில பேதமிருந்தாலும், அநேகமாக ஒன் றுக்கொன்று நகல்களாகவே யிருந்தன. சில,

பொதுத் தோற்றத்தில்தான் வித்தியாசப்பட்டிருந்தன. எல்லாம் சேர்ந்து பதினாறு படங்கள் இருந்தன.

“அவர் படங்கள் முடித்து முடித்து, ஏதோ திருப்திகொள்ளாமல் ஒன்றன் பின் ஒன்றை வைத்துவிடுவார். தாம் கண்ட அருட்காட்சியைக் கண்டபடி எழுத முடியவில்லையே என்று வருத்தப் படுவார். மறுபடியும் எழுத ஆரம்பிப்பார். இவ்வாறு கடைசியாக எழுதினதைத்தான் தாங்கள் முதலில் பார்த்தது.”

பார்க்குஹாருக்கு உற்சாகம் அதிகரித்து, அந்தப் படத்தை மறுபடியும் உற்றுப் பார்த்தார்.

“இந்தப் படம் அவருக்குத் திருப்தியளித்ததாகச் சொன்னாரா?’

“இல்லை, இல்லை. இது முடிந்து சில நாளைக்குள் மறுபடியும் ஒரு படம் எழுதலானார். பத்துப் பன்னிரண்டு நாள் விரதமிருந்து, பூஜை முடித்து, ஆரம்பித்தாராம். என் பாட்டனார் வாழ்க்கை ஓர் அதிசயம், எஜமான். நோன்பு முடிந்ததும், தியானத்திலிருந்தவர் திடீர் என்றெழுந்து, என் பாட்டியை - அவர் மனைவியை - அழைத்து ‘அடியே, சுவாமி தரிசனம் கொடுத்துவிட்டார். தேங்காய், பூ, பழம் கொண்டுவா!’ என்றார். அதன்பின் எழுத உட்கார்ந்தார். மத்தியானம் வெகு நேரமாயிற்று. படம் முடியவில்லை. அவர் தமையனார் தம் பூஜையை முடித்துக்கொண்டு அவர் பக்கத்தில் மெதுவாக வந்து உட்கார்ந்தார். குழந்தைகளும், என் பாட்டி

யும் - அப்போது அவள் வயிற்றில் என் தகப்பனர் கர்ப்பத்தில் இருந்தாராம் - பட்டினியிருக்கக் கூடா தென்று சொல்லி அவர்கள் மட்டும் சாப்பிட்டிருந் தார்கள். என் பாட்டனரும் அவர் தமையனரும் உபவாசம். அஸ்தமிக்கும் சமயம்; ஆனல் இன்னும் படம் எழுதிக்கொண்டே யிருந்தார். அப்போது திடீர் என்று 'கொள்ளைக்காரர்!' என்று கூக்குரல் கிளம்பிற்று. ஊர்மேல் கொள்ளைப்படை வந்த தென்று ஊராரெல்லாம் கோட்டைக்கு ஆயுதங்கள் எடுத்து ஓடினர்கள். ஊர் வாசல் மூடப்பட்டது என் பாட்டனர் வீரர். எழுந்து, 'இந்தப் படம் இன்று முடிவதில் பகவானுக்கு இஷ்டமில்லைபோலும்' என்று சொல்லிக்கொண்டே வில்லும் தூணியும் எடுத்துப் புறப்பட்டார்.

"வீட்டில் பெண்டுகள் அவரை மிகவும் வேண்டி னர்களாம், சாப்பிட்டுவிட்டுப் போங்கள் என்று; அவர் சிரித்துக்கொண்டே 'சாப்பாடு காக்கும், சண்டை காக்கமாட்டாது' என்று சொல்லிவிட்டுப் புறப்பட்டு விட்டார். தமையனரும், 'இருக்கட்டும், சீக்கிரம் வந்துவிடுவார்' என்று சொல்லிக் காத் திருந்தாராம். பூஜை செய்த பிரஸாதம் ஒரு பழம் மட்டில் என் பாட்டனர், பெண்டுகள் வேண்டுதலுக்கு இணங்கி, சாப்பிட்டுவிட்டுப் போனதாகச் சொன் னர்கள்.

"கொள்ளைக்கு வந்த படை பெரும்படை. எங்களுடைய ஆட்கள் குறைவு. தாக்க வந்தவர்

களுக்கு ஏதாவது கொடுத்துச் சமாதானப்படுத்தி அனுப்பிவிடுவது புத்திசாலித்தனமாக இருந்திருக்கும். அப்படியும் சிலர் யோசனை சொன்னார்களாம். இவ்வாறு சமாதானம் செய்தனுப்பியிருந்தால் போயிருப்பார்கள். ஆனல் என் பாட்டனர் சூரர்; அதற்கு ஒப்புக்கொள்ளவில்லை. தம்மைப் போல் இன்னும் சிலரைச் சேர்த்துக்கொண்டு கோட்டைச் சுவர்மேல் ஏறி, தாக்க வந்த படையை எதிர்க்க ஏற்பாடு செய்துகொண்டு இங்குமங்கும் போய்க்கொண் டிருக்கையில் கொள்ளைக்காரர்களில் ஒருவன் குறிபார்த்து அவரைத் துப்பாக்கியால் சுட்டுவிட்டான்.

“அதன் பிறகு எங்களுடைய ஆட்கள் அதிகமாகச் சேர்ந்து விட்டார்கள். வயல்களுக்குப் போயிருந்தவர்கள் சமாசாரம் கேட்டு ஓட்டமாய் வந்ததும் எல்லாருமாகச் சேர்ந்து கொள்ளைக்காரர்களை விரட்டி அடித்துத் துரத்திவிட்டார்கள்.

“எல்லாம் முடிந்ததும் என் பாட்டனரை வீட்டுக்குத் தூக்கிவந்தார்கள். குண்டு மார்புக்குள் போய்விட்டது. உயிர் துடிதுடித்துக்கொண்டிருந்தது. ஒருதடவை கண் திறந்து பேசினராம்.

“ஆமாம், சீக்கிரம் வந்துவிடுகிறேன்; வந்து படத்தை முடித்துவிட வேண்டாமா” என்று சொன்னதும் பிராணன் போய்விட்டதாம். மரணத் தறுவாயில் அவர் மனம் சண்டையைவிட்டுப் படத்துக்குப் போய்விட்டது.

"என் பெரிய பாட்டனர் - அவர் என் பாட்டனரைவிடப் பல வருஷங்கள் பெரியவர், அவருக்குத் தகப்பனர் மாதிரியே இருந்தாராம் - துக்கம் தாங்காமல் மார்பில் அடித்துக்கொண்டு, 'ஐயோ, என் குழந்தாய், உனக்கு ஒரு வாய் சாதம் போடாமல் பசியுடன் சாவுக்கு அனுப்பிவிட்டேனே' என்று அலறி அழுதாராம். இதை வளர்ப்பானேன்? பாட்டனரைத் தகனம் செய்துவிட்டுக் கிரியைகள் முடித்தார்கள்.

"என் பெரிய பாட்டனர் அதுமுதல் சித்தம் மாறினவர் போலவே இருந்தார். எப்போதும் வாசலண்டை யாரோ வருவதற்காகக் காத்துக்கொண்டிருக்கிறவாறே இருப்பாராம். விருத்தாப்பிய தசையில் என்னென்னவோ உளறிக் கொட்டுவாராம். 'இல்லை, அவன் வரமாட்டான்', 'என்ன நினைத்துக் கொண்டிருந்தானே', 'வந்து விடுவான், வந்து விடுவான்' - என்றிவ்வாறெல்லாம் முணுமுணுப்பாராம்; பிறகு அவரும் காலகதி அடைந்தார். தம் தம்பி கட்டாயம் மறுபடியும் வருவான், வந்து படத்தை முடிப்பான், என்று சொல்லி இறந்தார். 'வந்து படத்தை முடிப்பார்' என்பதே அவர் நம்பிக்கை."

கிழவனர் கதையை முடித்து மௌனமாயிருந்தார். நாங்களும் பேசவில்லை. கொஞ்சநேரம் கழித்துப் பார்க்குஹார் மெதுவாக, "அன்று அவர் எழுதிய படம் எங்கே?" என்றார்.

“உள்ளே இருக்கிறது”

“அதைத் தயைசெய்து காட்டமுடியுமா?”

“எங்கள் பெரியவர்கள் அதை யாருக்கும் காட்டக்கூடாது என்று சொல்லுவார்கள்.”

“ஏன்?”

“அது முடியாத படம். அதில் பிழைகள் இருக்கும். அதைப் பார்ப்பவர்கள் அதில் குற்றம் சொல்லக்கூடும். கலைஞருடைய ஆத்மாவை அது உறுத்தும்; அவர் புகழுக்கு அது ஒரு குறையாகும்.”

“ஐயா, உங்கள் ஓவியப்புலவப் பாட்டனார் ஒரு வீரர், மகான், தெய்விகக் கலையருள் பெற்றவர். அவரை யார் குறைகூறுவார்கள்? கூறினால்தான் என்ன? நாங்கள் குற்றம் கூறும் சுபாவக்காரர்களல்ல; தயைசெய்து படத்தைக் காட்டுங்கள்” என்று வற்புறுத்தினோம்.

“சரி, அப்படியே யாகட்டும். நீங்கள் மட்டில் வந்திருந்தால் காட்டியிருப்பேனோ இல்லையோ. இந்த அம்மாள் உங்கள்கூட இருக்கிறாள்; அதனால் காட்டுகிறேன். அவர்கள் பார்க்கவேண்டும் என்று மிக ஆசைப்படுவதாகத் தெரிகிறது. இன்னொரு காரணமும் உண்டு. அதைச் சொன்னால் உங்களுக்கு வேடிக்கையாக இருக்கலாம். என் பெரிய பாட்டனார் இறக்கும் தறுவாயில், தம் தம்பி மறுபடியும் கட்டாயம் வருவான், வந்து படத்தை முடிப்பான்,

என்று சொல்லி இறந்தார். அப்படிவந்து படத்தை முடிப்பார் என்பதே அவர் நம்பிக்கை."

"உங்கள் பாட்டனருங்கூட அப்படிச் சொன்னரா?"

"அப்படித்தான் அவர் சொன்னதைக் கேட்டவர்கள் எண்ணினர்கள். அதன்மேல் எங்கள் குடும்பத்தில் ஒரு நம்பிக்கை என்னவென்ருல், மறுபடியும் அவர் எங்கள் குடும்பத்தில் குழந்தையின் ஜன்மம் எடுத்துவந்து படத்தை முடிப்பார் என்பது. அப்படி அவர் மறு ஜன்மம் எடுத்துவந்து முடிக்குமுன் படத்தை யாருக்கும் காட்டக் கூடாதென்பது எங்கள் விருப்பம். என் தகப்பனர் பிறந்ததும், பெரிய பாட்டனர் அவரைச் சிறுவயதில் நன்ருகக் கவனித்துக்கொண்டே இருப்பாராம், ஏதாவது பாட்டனருடைய ஓவிய சக்தியின் குறிகள் காணப்படுகின்றனவா என்று. ஆனல் அப்படி ஏதும் தோற்றவில்லை. நான் பிறந்ததுங்கூட அப்படியே எதிர்பார்த்தாராம். அப்போதும் அவர் எண்ணம் நிறைவேறவில்லை. ஆயினும் அவர் காலகதி அடையும்போது, 'என் தம்பி சொன்ன சொல் தவறமாட்டான். சத்தியவந்தன். கட்டாயம் ஒரு நாள் வந்தே தீருவான். கோபாலகிருஷ்ணன் படம் ஜாக்கிரதை; பத்திரமாக வைத்திருங்கள்' என்று சொல்லி இறந்தாராம். என் தகப்பனர் ஒருநாள் இந்தப் படத்தைத் தம் குருவுக்குக் காட்டினர். அப்படியே நானும் இந்த அம்மாவுக்குக்

காட்டலாம் என்று தோன்றுகிறது. படத்தைக் காட்டலாம் என்று அவர்கள் முகத்தில் ஏதோ என்னை ஏவுகிறது."

இவ்வாறு சொல்லி, உள்ளேபோய், இரண்டு படங்கள் கொண்டுவந்து, அதில் ஒன்றை எங்கள் முன் வைத்தார்.

படத்தைப் பார்த்து நான் பிரமித்துப்போனேன். அது ஒரு மாயைப் படமாகவே யிருந்தது. ஒவ்வொரு கோட்டிலும் ஒரு ஜாலம். அதைச் சொல்ல முடியாது! வேணுகானம் காற்றையே ஸ்தம்பிக்கச் செய்து அதை அடக்கி ஆண்டுவிட்ட தோற்றம் படத்தில் உண்டாயிருந்தது. தனித்தனியாகப் பார்த்தால் நாம் பார்த்த மற்றப் படங்களைப்போலத் தான் இதுவும் தோன்றும். ஆனல் இப்படத்தில் ஏதோ ஒரு மாயை - இன்னதென்று விளங்கவில்லை - உயிர் ததும்பி ஆடி நின்றது. எமிலி கண் கொட்டாமல் அதைப் பார்த்துக்கொண்டு ஆனந்த பரவசமா யிருந்தாள்.

“இதுதானு முடிவு பெருத படம்?” என்ருள் வெகு நேரம் கழித்து.

“இல்லை, இல்லை. இதோ!” என்று இரண்டாவது படத்தை எங்கள்முன் திறந்து வைத்தார்.

அம்மம்ம!

எமிலி “ஹுறா!” என்று கூவிப் பிரமித்துப் போனுள்.

எல்லோரும் வாய்திறவாமல் படத்தை வெகு நேரம் பார்த்துக்கொண்டிருந்தோம். அற்புதமான சித்திரம். கொஞ்சநேரம் கழித்துப் பார்க்குஹுரார், "இந்தப் பசுவின்கீழ் என்ன எழுத எண்ணினுர்களோ?" என்ருர்.

ஏதோ எழுத ஆரம்பித்து ஓரிரண்டு கோடுகள் வரையப்பட்டிருந்தன. வரைந்து வரும்பொழுதே திடீர் என்று நிறுத்திவிட்டாற்போல் காணப்பட்டது.

"தெரியவில்லை. அந்தக் கோடுகள் இழுத்து, அதைப் பூர்த்தி செய்யுமுன் இவ்விடத்தில்தான் கொள்ளைக்காரர்கள் வந்ததனுல், கூக்குரல் கிளம்ப, படத்தை விட்டுவிட்டு உயிர் மாய்க்கப் போய்விட்டார்."

மறுபடியும் நான் படத்தை உற்றுப்பார்த்தேன். கோடு இழுத்திருக்கும் இடத்தில் மற்ருெரு பசுவை எழுத ஆரம்பித்ததுபோல் எனக்குத் தோன்றிற்று. ஆனுல் எப்படி நிச்சயமாய்ச் சொல்லமுடியும்? எமிலி படத்தைப் பார்த்துக் கொண்டே மௌனமாக இருந்தாள்.

"வேறு யாராவது உங்கள் பாட்டனுர் உத்தேசத்தைப்பற்றி ஊகிக்க யத்தனித்தது உண்டா?" என்று கிழவனுரை நான் கேட்டேன்.

"என் மகள் வயிற்றுப் பேரன் ஒரு பையன் இருக்கிருன். அவன் ஏதோ சொன்னுன். வேறு

யாரும் ஊகித்து எதையும் சொன்னது கிடையாது" என்றார்.

"ஐயா, எனக்கு இந்தப் படத்தை விலைக்குக் கொடுக்கமுடியுமா? கொடுத்தால் உங்கள் பாட்டனார் பெயரை எங்கள் தேசத்தில் - மேல்நாட்டில் - கீர்த்திபெறச் செய்வேன். என்ன சொல்லுகிறீர்கள்?" என்றார் பார்க்குஹார்.

"அதெப்படி முடியும்? படம் கொடுக்க முடியாது. என் பெரிய பாட்டனார் அதை யாருக்கும் காட்டக்கூட வேண்டாம் என்றல்லவோ சொன்னார்?"

"நான் கேட்பது என் லாபத்திற்காகவோ சந்தோஷத்திற்காகவோ அல்ல. உங்கள் பாட்டனாருக்கு நியாயமாய்க் கிடைக்கவேண்டிய புகழ் அவருக்குக் கிடைக்கும்படி செய்யத்தான் நான் படத்தைக் கேட்பது. உங்கள் ஊர் - உங்கள் தேசம் - இதனால் கியாதி அடையும்."

"ஆனால் அவர் சொன்னபடி மறுபடி வந்தால் நாம் என்ன செய்வோம்?"

"யார்? உங்கள் பாட்டனாரா? கிழவனாரே, அப்படிக்கூட நடக்குமா? அப்படி யாராவது நம்புவார்களா? யோசியுங்கள்."

"நாம் யோசிப்பதில் என்ன பயன்? வருகிறேன் என்று சொன்னவருக்கல்லவோ தெரியும்? வெறுமனே சொல்லமாட்டாரே! படத்தை அவருக்

காக வைத்திருப்பது எங்கள் கடமை. எங்கள் பெரி யோர்கள் எல்லாம் அப்படியே சொல்லி இருக்கி ருர்கள். அப்புறம் ஆண்டவன் இஷ்டம்."

இதற்குமேல் பார்க்குஹார் வேருென்றும் சொல்லவில்லை. "சரி; உங்கள் இஷ்டம். ஆனல் யோசித்துப் பாருங்கள். எங்களுக்கு இப்போதே அவசரமில்லை. மறுபடி நாலு ஐந்து நாட்களில் வருகிருேம். நீங்கள் முடிவு செய்து சொல்லுங்கள். எப்படியானலும் சரி."

இப்படி நாங்கள் பேசிக்கொண்டிருந்ததை எமிலி கவனித்ததாகவே தெரியவில்லை. திடீ ரென்று படத்தை விட்டு எங்களைப் பார்த்து, "நான் சொல்லட்டுமா?" என்ருள்.

"என்ன?" என்றேன்.

"சித்திரம் எழுதியவர் இந்த இடத்தில் என்ன எழுத எண்ணினர் என்று?"

"சொல்" என்றேன்.

எமிலி சந்தோஷத்தால் முகம் சிவந்து சொன் ஞள்:- எனக்குத் தோன்றுகிறது, இந்த இடத்தில் ஒரு கன்று பால்குடிக்கத் தாயின் மடியை நோக்கித் தாவி ஓடியது; நடுவழியில் பகவானுடைய வேணு கானம் காதில் தாக்க, பசி தீர்ந்து எல்லாம் மறந்து நின்றுவிட்டதாகச் சித்திரகாரர் எழுத ஆரம்பித் தார் என்று எண்ணுகிறேன். வெறும் பால் குடித்

தால், தாய்ப்பாலானாலுங்கூட, மறுபடி பசிக்குமல்லவா? பகவான் குழலமிருதம் குடித்தபின் பசியே தீர்ந்ததல்லவா? கானம் அப்போதுதான் ஆரம்பித்த சமயம் என்பது சித்திரகாரர் கற்பனை. பாருங்கள்;எல்லாக் குறிகளும் அதற்கு இசைந்திருக்கின்றன. முதல் படம் எல்லோரும் வழக்கமாய் எழுதும் காட்சி. இந்தப் படத்தில் குழல் வாசிக்க ஆரம்பித்த க்ஷணம் அப்படியே சித்திரிக்கப்பட்டிருக்கிறது. இல்லையா, பாருங்கள்" என்றாள்.

"அப்படியானால் என் பேரப் பையன் சொன்னது நிஜமே!" என்றார் கிழவர்.

"என்ன சொன்னான்?" என்று ஒரே வாக்காய் நாங்கள் எல்லோரும் கேட்டோம்.

"அவன் சொன்னது—'பார்; பகவான் ஏதோ இப்போது எண்ணி, அதை வெளியிடக் குழலை எடுத்து வாயில் வைத்திருக்கிறார். பார்; வெளிவந்த சுவரங்கள் காற்றையும் ஸ்தம்பிக்கச் செய்துவிட்டன. இதோ இந்தக் கன்றைப்பார்: தாயிடம் தாவிப் போகையில் வழியில் அப்படியே நின்றுவிட்டது. பாலைவிடத் தித்திக்குமல்லவா பகவான் வேணுகானம்! குழலோசை உண்டபின் பால் என்னத்திற்கு?—இப்படித்தான் சொன்னான். அம்மாளும் இப்போது அப்படியே சொல்லுகிறார்கள்."

பையனுடைய புத்தி நுட்பத்தைக் கண்டு வியந்தோம். உண்மையில் படத்தைப் பார்க்கப் பார்க்க

எங்கும் கானத்தில் லாகிரி பொங்கிக் கிளம்புவதை யும், குழலை வாயில் வைத்த பகவானின் முகத்தில் ஒரு சங்கல்ப அருளுதயம் ஒளிவீசுவதையும் கண்டோம்.

பார்க்குஹார், "ஐயா, உங்கள் பையனை ஓவி யம் பழக்குங்கள்; அவன் பெரிய சித்திரக்கலைஞன் ஆவான் என்பதில் சந்தேகமில்லை. நாங்கள் நாலு நாள் கழித்து வருகிறோம். அப்போது படம் எங் களுக்குக் கொடுக்கும் விஷயம் முடிவாகச் சொல் லுங்கள்" என்றார்.

எமிலி ஒன்றும் பேசவில்லை. பிறகு எழுந்து புறப்பட்டோம். கிழவனார் வெற்றிலைபாக்குக் கொடுத்து அனுப்பினார்.

படத்துக்காக நாங்கள் மறுபடி போகும் உத் தேசமில்லை. படத்தின் மேல் முன்போலவே எங் களுக்கு மோகந்தான். நல்ல விலை கொடுப்பதாக ஆசை காட்டினால் கிழவனார் கொடுத்துவிடலாம். ஆனால், நாங்கள் போவதாக இல்லை. அதற்குக் காரணம் சொல்லுகிறேன்.

நாங்கள் வீடு திரும்புகையில் கார்த்தவீரியன் குளப்படியில் எமிலி சற்று நேரம் உட்கார்ந்தாள். பார்க்குஹார் சிற்றுண்டிக் கூடையைக் கொண்டு வந்து அவிழ்த்தார். எல்லோரும் பலஹாரத்திற்கு உட்கார்ந்தோம்.

"என்ன அழகான குளம்!" என்றாள் எமிலி.

"அழகாய்த்தான் இருக்கிறது. ஆனால் இப்போது தண்ணீர் வற்றிக்கிடக்கிறது. அதோ பார்; யாரோ முட்டாள் சில கல்லுகளைப் பெயர்த்து எடுத்துப்போய்விட்டான். அநேகமாய் ஒரு விகாரமான சிறு வீடு கட்ட அந்தக் கல்லை உபயோகித்திருப்பான்" என்றேன்.

"அண்ணா! அம்மாதிரிதான் நாமும் செய்து வருகிறோம். உனக்கு அது தெரியவில்லையா? குளத்தில் ஜலமில்லைதான். ஆனால் குளம் அப்படியே இங்கே இருக்கிறது. யாராவது கொஞ்சம் கவனித்துச் செடி கொடி பிடுங்கி எறிந்து கட்டடம் அழியாமல் பார்த்துவந்தால், என்றைக்காவது ஜலம் வரும் போது அதைக் கொள்ளக் குளம் இருக்கிறது. இந்தச் சுந்தரமான படிகளின்மேல் எத்தனை தலைமுறைகளாகச் சிறு பெண்களும் யுவதிகளும் சந்தோஷமாகச் சிலம்பும் கால் மெட்டிகளும் ஒலிக்க ஏறியிறங்கி நடந்திருப்பார்கள்! அந்த மங்கள ஓசை காதில் இப்போதும் கேட்கிறாற்போலவே யிருக்கிறது. குளம் இப்படியே இருந்தால் ஜலமும் வரலாம். ஜலமெடுக்கப் பெண் குழந்தைகளும் வரலாம். ஆனால் கற்களைப் பிடுங்கி எறிந்து குளத்தைப் பாழாக்கிவிட்டால் அப்புறம் என்ன இருக்கிறது? யாரும் கிட்ட நெருங்கப் பயப்படும் விகாரமான குழிதான். தண்ணீர் வந்தாலும் குட்டை நாறும். அவ்வளவே."

"உண்மைதான், எமிலி. ஆனல் அதிலிருந்து நீ சொல்லுவது என்ன? எனக்குத் தெரியவில்லை" என்றேன்.

"என்னவென்ரு கேட்கிருய்? கேளுங்கள்: படம் ஒன்று நன்ருயிருக்கிறபடியால் அதை எடுத்துப் போய்விடுகிரேரம். சிலை ஒன்று அழகாயிருந்தால் அதைத் தூக்கிப்போய்விடுகிரேரம். இவ்வாறு நாம் செய்துகொண்டே போனல், இந்தத் துர்ப்பாக்கிய தேசம் கண்விழித்து எழும்போது அதற்கு என்ன மிச்சமிருக்கும்? சொல்லுங்கள் பார்க்கலாம். ஐயோ, நாம் செய்வது மகாபாவம்!" என்ருள்.

"ஆனல் உனக்குத் தெரியாதா: நாம் கொண்டு போவதெல்லாம் இந்தத் தேசத்தின் பெருமையை உலகத்திற்குக் காட்டுவதற்கல்லவோ? வெறுமனே கொள்ளையா அடிக்கிரேரம்?"

"இம்மாதிரி நாம் பரப்பும் புகழால் இந்தத் தேசத்திற்கு நிரம்ப லாபந்தான்! இந்தக் கிழவனுருக்குச் சொல்லுகிறீர் — உன் பேரனுக்குச் சித்திரம் எழுதச் சொல்லித்தாவென்று. சொல்லிவிட்டு, அவர் வீட்டுப் படத்தை எடுத்துப் போய்விட ஏற்பாடு செய்கிரேரம். அவருக்கு இது மிக நன்மை செய்தவாறல்லவா?"

குதிரைகளின்மேல் மெதுவாக வீடு திரும்பினேம். கொஞ்ச தூரம் சென்றபின் எமிலி என்னிடம் சொன்னள்:

" அண்ணு, உனக்குத் தெரியுமா; இந்த ஜனங் களுக்கு ஒரு நம்பிக்கையுண்டு ; சில சமயம் உடலை விட்டு உயிர் வெளியேகிக் கொஞ்சகாலம் இங்கு மங்கும் அலைந்து மறுபடி திரும்பிவரும் என்று. அப்படி ஆத்மா வெளியே போயிருக்கும்போது உடல் மூர்ச்சையாகக் கிடக்கும். அப்போது வேறொரு பிராணன் வந்து தனக்குச் சேராத உடலில் புகுந்துகொண்டு சொந்தக்கார ஆத்மா வுக்கு இடமில்லாமல் செய்துவிடுமாம்."

" இத்தகைய நம்பிக்கையைப் பற்றி நானும் கேள்விப்பட்டிருப்பதாகச் சொன்னேன்."

"'பரகாயப் பிரவேசம்' என்று அதற்குப் பெயர் சொல்லுவார்கள். இப்படித் திரும்பிவரலாம் என்று ஒரு தேகத்தை விட்டு ஆத்மா வெளியே போயிருக்குங்காலத்தில் அந்தத் தேகத்தை எங்கே யாவது ஒளித்து வைத்து அல்லது விரூபமாக்கி, அடையாளம் தெரியாமல் செய்துவிட்டால், அதன் பிராணன் திரும்பிவந்து உடல் கிடைக்காமல் இங்கு மங்கும் பரிதாபமாகத் தங்க இடமில்லாமல் திரியு மல்லவா? "

" கற்பனை சரிதான் ; ஆனல் என்ன? "

"அண்ணு, 'பாரத மாதா' என்றிவகர்ள் சொல் லிக் கொண்டாடும் அழகிய ஒரு தேகம் இப்போது மூர்ச்சையில் கிடக்கிறது. அவள் குழந்தைகள் அத் தேகத்தைச் சுற்றிப் பிரலாபித்துக்கொண்டு உட் கார்ந்திருக்கிறார்கள். ஆனல் இப்போதுதான் அவள்

முகத்தில் உயிர் மறுபடி வருவதுபோன்ற சின்னம் தோன்றுகிறது. இச்சமயத்தில் அவளுடைய உடலை விரூபமாக்கி விடலாமா? அவளுடைய கழுத்தாரத்தையும், விரல் மோதிரங்களையும், கை வளையல்களையும் கழற்றிக்கொண்டு போய் விடுவதா? திரும்பி வரும் உயிருக்குத் தன் உடல் தனக்கு அடையாளம் தெரியாமல் செய்துவிடலாமா? இது உடலைத் தூக்கி ஒளித்துவிட்ட மாதிரிதானே ஆகும்? குழந்தைகளின் கண்ணீரைத் துடைக்கலாம் என்று தாய் ஆசைப்பட்டு ஓடிவரும் சமயம், நாம் இவ்வாறு உடலைத்திருடியோ, அதன் ஸ்ரீயைக் களவாடியோ விடலாமா? அவளுடைய குழந்தைகளைத் தாயில்லா அநாதைகளாக்கலாமா நாம்? இது நமக்குத் தகாது என்பது என் எண்ணம்.''

இப்படிச் சொல்லிய எமிலியின் கண்களில் நீர் ததும்பிற்று. பார்க்குஹார் வேறுபக்கமாக முகம் திருப்பிக்கொண்டார். ஒருவேளை அவரும் தம் குழந்தை ஜியார்ஜை அப்போது நினைத்துக்கொண்டாரோ என்னவோ! எமிலி மூர்ச்சையாகக் கிடக்க, பக்கத்தில் ஜியார்ஜ் உட்கார்ந்து அழுதுகொண்டு உயிர் திரும்பிவரக் காத்திருப்பதாக ஒருவேளை, மனதில் கற்பனைக் காட்சி பார்த்துக்கொண்டிருந்தாரோ என்னவோ தெரியவில்லை. வீடுபோய்ச் சேரும்வரை நாங்கள் மறுபடி பேசவில்லை.

படத்துக்காகப் போவதில்லை என்று இன்று காலை தீர்மானித்துவிட்டோம்.

இந்தச் சம்பவம், நான் சிலகாலமாக எண்ணிய இன்னொரு எண்ணத்தை ஊர்ஜிதப்படுத்திற்று. இந்திய ஜாதியார் இழந்துவிட்ட கல்வி கேள்விகளுக்குப் பதில் நம்முடைய நாகரிகம், கல்வி கேள்விகளை அவர்களுக்குத் தரலாம். ஆனால் உண்மையில் அது ஓர் உடல் தனக்கு உரிய பிராணனுக்காகக் காத்திருக்க அந்நிய ஆன்மா ஒன்று வந்து, பரகாயப்பிரவேசம் செய்து அவ்வுடலை ஆக்கிரமித்தது போன்றதேயாகும்.

# பட்டாசுக் கட்டு

"அப்பா, பட்டாசு!" என்று வீரன் மகன் அழுதால் வீரன் எங்கிருந்து பட்டாசு வாங்கிவர முடியும்? அக்கிரகாரத்திலும் முதலியார் தெருவிலும் குழந்தைகள் தீபாவளிக்கு மூன்று நாள் முன்னிருந்தே பட்டாசு சுட ஆரம்பித்தார்கள். வீரன் மகன், தெருவில் நாலு 'மார்' தூரம் எட்டி நின்று பார்த்துக்கொண்டிருந்தான். வெடிக்காத பட்டாசுகளைப் பொறுக்கப் போனான். "போ!" என்று அதட்டித் துரத்தினார்கள்.

மறுநாள் ஊரிலுள்ள பல வீடுகளிலும் 'பட்! பட்!' என்று பட்டாசு சப்தம் கிளம்பிற்று. வீரன் மகனுக்கு அடங்காத ஆசை. 'ஏன் எல்லார் வீட்டிலும் பட்டாசு, தன் அப்பன் வீட்டில் மட்டும் கிடையாது?' என்று அவன் மனதில் தோன்றிய கேள்விக்குப் பதில் அவனுக்குப் புலப்படவில்லை. அப்பனைக் கேட்கவும் அவனுக்குப் பயம்.

சேரிக்குத் திரும்பிப் போகவே மனம் வரவில்லை. பசியானாலும் வெகு நேரம்வரை நின்றுகொண்டு ஊர்க் குழந்தைகள் பட்டாசு சுடுவதையே பார்த்துக்கொண்டிருந்தான்.

"எட்டி நில்!" என்றார் தெருவில் போகும் ஓர் ஐயர்.

வீரன் மகன் நடுங்கி ஓடிப்போய் ஒரு சந்தில் சுவரை ஒட்டிக்கொண்டு பதுங்கினான்.

ஏன் இப்படிப் பதுங்கவேண்டும் என்கிற கேள்வி வீரன் மகனுக்குத் தோன்றிற்றோ இல்லையோ, எப்படி நம்மால் சொல்ல முடியும்? குழந்தைகள் மனதில் தோன்றும் எண்ணங்கள் யாருக்குத் தெரியும்? பக்கத்தில் ஒரு நாய்க்குட்டி. அதுதான் தன் இனம் என்று அதை மெதுவாகத் தடவிக் கொடுத்துக்கொண்டு, ஐயர் போகும் வரையில் அங்கே இருந்துவிட்டுப் பிறகு வெளியே வந்தான்.

வெகு நேரம் கழித்துச் சேரியிலுள்ள தன் குடிசைக்குச் சென்றான்.

"அப்பா, எனக்குப் பட்டாசு வாங்கித் தர மாட்டாயா?" என்று வீரனைக் கேட்டான். பளீர் என்று ஓர் அடி கன்னத்தில் விழுந்தது. பையன் கிறு கிறுவென்று சுருண்டு கீழே விழுந்தான்.

"குடித்துப் போட்டுக் குழந்தையை ஏன் அடிக்கிறாய்?" என்று தாய் சீறிக்கொண்டு வந்தாள். "கள்ளுக்குப் போட்ட காசில் குழந்தைக்கு ஒரு கட்டுப் பட்டாசுதான் வாங்கித் தரக்கூடாதா? கேட்டதே பாவமா? ஏன் அடித்துக் கொல்லுகிறாய்?" என்று குழந்தையிடம் ஓடிப்போய், தூக்கிப் பிடித்தாள்.

"அம்மா, பட்டாசு" என்றான் மறுபடியும்.

"சும்மாவிரு. பறைப்பையனுக்குப் பட்டாசு என்னத்திற்கு?" என்று தாய் சொல்லிவிட்டு அடுப்பண்டை போய்விட்டாள்.

"மறுபடி கேட்டாயானல் கொன்று போட்டு விடுவேன், தெரியுமா?" என்று அதட்டினன் வீரன்.

## 2

துரைசாமி ஐயங்கார் வீட்டில் பெரிய தடபுடல். மாப்பிள்ளை பட்டணத்திலிருந்து பெட்டியும் படுக்கையுமாக வந்து இறங்கினர். இவர் துரைசாமி ஐயங்காரின் மூன்ருவது பெண்ணின் கணவர். பேர் செல்லமையங்கார், பி. ஏ. சென்ற சித்திரை மாதம் விவாகம் வெகு விமரிசையாய் நடந்தது. ரூபாய் நாலாயிரம் செலவு. இதுதான் முதல் தீபாவளி. மைத்துனன்மார் இரண்டு பையன்களுக்குமாக வாங்கிக்கொண்டு வந்திருந்த பட்டாசுக்கட்டு இருபதையும், மத்தாப்புத் திணுசுகளையும் அந்தக் குழந்தைகளுக்கு எடுத்துக்கொடுத்துவிட்டு, மாமியாரைப் பார்க்கப்போனர். கிட்டுவும், சீனுவும் - மைத்துனர், முறையே ஏழு வயது, நான்கு வயது - பட்டாசுக் கட்டுகளைப் பங்குபோட்டுக் கொண்டார்கள். மஞ்சள் கட்டாகவே தனக்கு வேண்டும் என்று சீனு அழுதான். கிட்டு கொடுக்கமாட்டேன் என்று சண்டை போட்டான்.

"பாவம்! குழந்தைக்கு மஞ்சள் கட்டுக் கொடடா" என்ருள் கமலம். இவள்தான் கலியாணப் பெண்.

பிறகு குழந்தைகளுக்குள் சமாதானம் செய்து வைத்து, "இப்போது சுடக்கூடாது. நாளைக்குத் தான் தீபாவளி. எண்ணெய் தேய்த்து ஸ்நானம் செய்துவிட்டுச் சுடலாம்" என்று சொல்லிவிட்டுக் கமலம் தாயாரண்டை போய்விட்டாள்.

"இப்பவே சுடுவேன்" என்றான் கிட்டு.

"நான் சுடமாட்டேன்" என்றான் சீனு.

"நான் ஒரு கட்டுச் சுட்டுவிட்டு மீதியை நாளைக்கு வைத்துக்கொள்வேன்" என்றான் கிட்டு.

இருவரும் பட்டாசுக் கட்டுகளைத் தூக்கிக் கொண்டு தாயாரிடம் போனார்கள்.

"அம்மா! பத்திரமாக வைத்திரு" என்று சீனு தன் பங்குக் கட்டுகளைத் தாயார் மடியில் போட்டான். மாப்பிள்ளை வந்திருக்கும் ஆனந்த சாகரத்தில் மூழ்கியிருந்த சீதம்மாள் குழந்தையைக் கட்டி முத்தமிட்டு, 'சீனு, நல்ல பையன்' என்று சொல்லி எழுந்து வெள்ளி சாமான் வைத்திருக்கும் அலமாரியில் பட்டாசுக் கட்டுகளை வைத்துவிட்டு மாப்பிள்ளையுடன் பேசப் போனாள்.

## 3

தீபாவளி நாள் வந்தது. "ஐயோ! எல்லாம் தூக்கிக் கொண்டு போய்விட்டானே! ஆயிரம் ரூபாய் வெள்ளி சாமானும் போச்சே" என்று கதறினாள் சீதம்மாள்.

"கைப்பெட்டியைக் காணவில்லையே;பாங்கியில் வாங்கி வந்த நோட்டெல்லாம் அதிலே வைத்திருந் தேனே" என்று கத்தினார் துரைசாமி ஐயங்கார்.

"போலீசுக்குப் போய்ச் சொல்லவேண்டும்" என்றார் மாப்பிள்ளை செல்லம் ஐயங்கார்.

"எத்தனை வைத்திருந்தீர்?" என்று கேட்டார் சீதம்மாள் தம்பி ஆராவமுதையங்கார்.

"அம்மா, பட்டாசு எல்லாம் எங்கே?" என்றான் சீனு.

"சும்மா இரு. பட்டாசு எல்லாம் திருடன் கொண்டுபோய் விட்டான்" என்று சீனு காதில் கிட்டு மெள்ளச் சொன்னான்.

"கிட்டு, திருடன் என்றால் யார்?" என்றான் சீனு.

"கறேலென்றிருப்பான். வீட்டுக்கு உள்ளே மெள்ள வந்து ராத்திரி நாம் தூங்கும்போது சாமான் எல்லாம் கொண்டுபோய் விடுவான்" என்றான் கிட்டு.

"நேற்று வந்தானா?" என்றான் சீனு. கிட்டு தலை அசைத்தான்.

"எல்லாப் பட்டாசும் கொண்டுபோய் விட்டானா?" என்று சொல்லிச் சீனு அழ ஆரம்பித்தான்.

"அழாதே! அப்பா! அந்தத் திருடனைப் பிடித்து உதைக்கலாம்" என்று சீதம்மாள் குழந்தையைத் தடவிக் கொடுத்தாள்.

"குழந்தையின் பட்டாசைக்கூடக் கொண்டு போய் விட்டான் பார்த்தாயா? பாவி திருடன்!" என்றாள் கமலம்.

கைப்பெட்டியை வீடெல்லாம் தேடிப் பார்த்து விட்டுக் கிடைக்காமல் துரைசாமி ஐயங்கார் தலை மேல் கையை வைத்துக்கொண்டு ஒரு மூலையில் உட்கார்ந்துகொண்டார்.

"போனது போனதுதான். இனி கிடைக்கப் போகிறதா? வாருங்கள் ஸ்நானம் செய்ய'' என்று சீதம்மாள் மாப்பிள்ளையை அழைத்தாள்.

"இல்லை; சாவடியூருக்கு உடனே போய்ப் போலீஸ் ஸ்டேஷனில் தெரியப்படுத்தி விடவேண்டும். வாருங்கள், மாமா?" என்று செல்லம் ஐயங்காரும் மாமா கிருஷ்ணையங்காரும் வெளியே போனார்கள்.

"ஒன்றுகூடவிடாமல் எல்லா வெள்ளி சாமான்களையும் எடுத்துப் போய்விட்டானே; நான் எப்படி மாப்பிள்ளைக்கு விருந்து பண்ணப்போகிறேன்?' என்று மறுபடியும் அலறினாள் சீதம்மாள்.

## 4

வீரன் மகன் பட்டாசு சுட்டுக்கொண்டிருந்தான். சேரியில் மற்றக் குழந்தைகள் எல்லாம்

சுற்றிக்கொண்டு கை தட்டிக் கூப்பாடு போட்டுக் கொண்டிருந்தார்கள்.

ஏது பட்டாசு?

எப்படியோ தெரியவில்லை, தீபாவளி யன்று காலையில் பட்டாசுக் கட்டுகள் நான்கு கொண்டுவந்து வீரன் தன் மகனிடம் 'சுடு' என்று கொடுத்தான். பையன் ஒரே குதியாய்க் குதித்து, "அம்மா நெருப் புக் கொடு" என்று ஓடினன்.

* * * *

தீபாவளிக்கு அடுத்த சனிக்கிழமை யாரோ இருவர் வந்து வீரனைக் கூப்பிட்டுக்கொண்டுபோனார் கள். போனவன் பிறகு திரும்பி வரவில்லை. பெண் சாதியும் மகனும் அலறிக்கொண்டு ஊருக்குள் வாத் தியாரண்டை ஓடினார்கள். "விண்ணப்பம் போட்டுப் பார்க்கிறீர்களா?" என்று அழுதாள்.

"அவர்கள் போலீஸார். உன் புருஷன்மேல் கன்னக் களவுக் கேசு" என்றார் வாத்தியார் மகா லிங்கம் பிள்ளை.

"ஐயோ கெட்டேனே!" என்று தலைமேல் அடித்துக்கொண்டாள்.

கள்ளுக்கடையில் கிடைத்த செய்தியின் மேல் போலீஸார் உடுப்பில்லாமல் சேரிக்கு வந்து குப் பனை இட்டுக்கொண்டு போய், பிறகு திரும்பிவந்து சேரியில் விசாரித்தார்கள். குப்பையில் கிடந்த பட் டாசுத் துண்டுகளைப் பார்த்து, "ஏது பறைச்சேரியில்

பட்டாசு ?" என்று விசாரித்தார்கள். வீரன் மகன் சுட்டான் என்று சில குழந்தைகள் சொல்லின. எரிந்து போன பட்டாசுத் துண்டுகளை யெல்லாம் வாரிக்கொண்டு போனார்கள்.

பிறகு வீரனைச் சாவடியூருக்குக் கொண்டு போய் ஸ்டேஷனில் 'விசாரித்தார்கள்'. 'விசாரிப்பது' என்றால்தான் தெரியுமே!

"அடிக்காதீர்கள், சாமி, சொல்லிவிடுகிறேன்." என்றான் வீரன்.

*　　*　　*　　*

மறுநாள் தலையூரில் வேங்கடன், சென்னராயன் என்ற இரு குறவர்களையும் பிடித்துப் போனார்கள். அடுத்த நாள் பக்கத்து ஊரில் குப்பன் ஆசாரி வீட்டில் சோதனை போட்டார்கள். சில வெள்ளி சாமான்கள் கிடைத்தன. பிறகு குப்பன் ஆசாரியை விசாரித்தார்கள். இரண்டுநாள் கழித்துக் குப்பன் ஆசாரி மாமனார் வீட்டைச் சோதனை போட்டத்தில் நோட்டுகளாக ஐந்நூறு ரூபாயும் சில வெள்ளி சாமான்களும் அகப்பட்டன.

## 5

வீரன் மகன் சாட்சிக் கூண்டில் நிற்கிறான்.

"உன் அப்பன் உனக்குப் பட்டாசு கொடுத்தானா?"

"ஆமாங்கோ—இல்லைங்கோ—சாமி" என்றான் சிறுவன்.

"தைரியமாய்ச் சொல்! பயப்படாதே" என்று இன்ஸ்பெக்டர் அதட்டிக் கேட்டார்.

"நான் பட்டாசு அப்பனைக் கேட்டேன். ஒரு அடி கன்னத்தில் போட்டான். நான் அடி தாங்காமல் கீழே விழுந்தேன். நான் பட்டாசு சுடவேயில்லை; சத்தியம்" என்றான் பையன்.

"அப்படித்தானுங்கோ, சாமி! எல்லோரும் பொய் சொல்லுகிறார்கள்" என்று கோர்ட்டில் ஒரு மூலையில் ஜனக் கூட்டத்திற்கு இடையில் நின்று கொண்டு திடீர் என்று கத்தினாள் தாய். "பிடி அவளை!" என்றார் போலீஸ் இன்ஸ்பெக்டர்.

உடனே இரண்டு போலீஸ்காரர்கள் பாய்ந்தார்கள். வீரன் மனைவியை இழுத்துக்கொண்டு மாஜிஸ்ட்ரேட் மேஜைக்குப் பக்கத்தில் கொண்டு போய் நிறுத்தினார்கள்.

"ஜாக்கிரதை! சாட்சிக்குச் சொல்லித்தரவா இங்கே வந்தாய்?" என்று மாஜிஸ்ட்ரேட் அதட்டின அதட்டில் வீரன் மனைவி மூர்ச்சை போகும் மாதிரி நடுநடுங்கினாள்.

"கொண்டுபோ வெளியே!" என்றார்கள் மாஜிஸ்ட்ரேட்டும், இன்ஸ்பெக்டரும் ஒரே மூச்சில்.

பிறகு விசாரணை நடந்தது. பட்டாசுகளைப் பற்றிப் பையன் இரண்டு மூன்று விதமாய் மாற்றி மாற்றிச் சொன்னான்.

"போதும்" என்றார் மாஜிஸ்ட்ரேட்.

பிறகு இன்ஸ்பெக்டர் வெகுநேரம் பேசினார்.

* * * *

மாஜிஸ்ட்ரேட் ஒரு வாரம் கழித்து வீரனையும் தலையூர்க் குறவர்களையும் விடுதலை செய்துவிட்டார். இரண்டு ஆசாரிகளுக்கு மட்டும் தண்டனை. "வீரன் போலீசாரிடம் சொன்னதை மட்டும் வைத்துக் கொண்டு குறவர்களைத் தண்டிக்கமுடியாது" என்று தீர்ப்புச் சொல்லிவிட்டார்.

வீரன் பேரிலும் போதிய சாட்சியம் கிடை யாது. சேரியில் எப்படிப் பட்டாசு வந்தது என்பது மிகவும் சந்தேகத்திற்கு இடமாயிருப்பினும், துரை சாமி ஐயங்கார் வீட்டில் களவுபோன பட்டாசு தான் சேரியில் குப்பையில் கிடந்த துண்டுகள் என்று நிச்சயமாக யாரும் சாட்சி சொல்லவில்லை என்கிற காரணத்தைக்கொண்டு வீரனையும் விடுதலை செய்துவிட்டார்.

## 6

"ஏண்டா, வேங்கடா, அந்த மடப்பயல் தவிர, வேறு யாராவது பட்டாசுக் கட்டை எடுத்துப் போவானா? அதனாலல்லவோ இத்தனை எழவு ஏற்பட்டது" என்றான் சென்னராயன்.

" அப்பவே நான் சொன்னேன், வேறு ஏதா வது ஒரு சாமான் எடு என்று. நான் சொல்லச் சொல்ல அந்தப் பட்டாசுக் கட்டுகளை யெல்லாம் வாரி வாரி மூட்டை கட்டிக்கொண்டிருந்தான். அதற்குள் வீட்டிற்குள் யாரோ 'ஊம்' என்று கத்தி

ணர்கள். நாம் போகவேண்டியதாச்சு" என்றான் வேங்கடன்.

"ஜாதிக்கு இயலாத தொழிலில் எவனும் போகக்கூடாது. நாம் இவனைச் சேர்த்துக்கொண்டு போனது நம்முடைய தவறு" என்றான் சென்னராயன்.

முதல் நாள் பையன் பட்டாசுக்காக அழுததும், வீரன் குடி வெறியில் பையனை அடித்ததும் அந்தக் குறவர்கள் அறியார்கள்.

வீரன் சேரிக்குத் திரும்பிவந்தான். ஜெயிலில் வேளைக்கு வேளை ஆகாரம் கொடுத்துவந்தார்கள். வீட்டிலோ சோற்றுக்கு வழியில்லை. சட்டியைத் தூக்கிக்கொண்டு குடியானத் தெருவுக்குப் போனாள் வீரன் மனைவி. இருந்தாலும், புருஷன் வீட்டுக்குத் திரும்பி வந்தான் என்கிற மகிழ்ச்சியைப் பசிப் பிணியும் மறைக்க முடியாது.

மறுபடி வீரன் மகன் பட்டாசுக்காக அழமாட்டான். யாராவது பட்டாசு சுடுவதைக் கண்டால் தூரப் போய்விடுவான்.

---

மாடல் அச்சுக்கூடம், சென்னை.—(1938513-2-33.)



# கண்ணன் காட்டிய வழி

அல்லது

## பகவத்கீதையின் பொருள் விளக்கம்

சென்னை, அரசாங்க முதல் மந்திரி

**சக்கரவர்த்தி ராஜகோபாலாச்சாரியார் அவர்கள்**

*இயற்றியது* விலை அணா **8**

முக்கியமான சுலோகங்களும் உரையும் அடங்கியுள்ளது

பொருளடக்கம்



---

**அல்லயன்ஸ் கம்பெனி, மயிலாப்பூர், சென்னை.**


விஷவிருக்ஷம்